# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ. 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்
துணை ஆசிரியர் :
K. P. இளங்கோவன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

மலர் 1 | 15-1-83 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை | இதழ் 17/18


# தமிழக அரசின் 'கலைமாமணி' விருதுகள்



## 1983-ம் வருடத்திற்கு பரிசு பெற்ற கலைஞர்கள்

வருடாவருடம் தமிழக அரசு. இயல் இசை நாடக மன்றம் மூலமாக தலைவர்களுக்கும் பல துறை வல்லுநர்களுக்கும் அவர்களது திறன் சேவையைப் பாராட்டி 'கலைமாமணி' என்னும் பட்டத்தை வழங்கி வருகின்றது. இவ்வாண்டு பட்டம் பெற்ற 31 கலைஞர்களுக்கு வரும் 26-1-83 குடியரசு தினத்தன்று காலை சென்னையில் தமிழக முதல்வர் எம். ஜி. ஆர். விருதுகளை வழங்கிவாழ்த்த உள்ளார்.

கலைத்துறையில் பட்டம் பெற்றவர்கள்!—

நடிகர் ரஜனிகாந்த், நடிகை சரிதா இயக்குநர் பாரதிராஜா இசை - மயிலம் வஜ்ஜிரவேலு முதலியார். வயலின்-சிக்கல் பாஸ்கரன், வீணை-சாரதா சிவானந்தம், புல்லாங்குழல் பிரபஞ்சம் சீத்தாராமன். நாதஸ்வரம்-இஞ்சிக்குடி P. கந்தசாமி, P. கணேசன் சகோதரர்கள், தவில்-தஞ்சாவூர் T. R. கோவிந்தராசன், கதாகாலட்சேபம் - பாலமீரசந்திரா, பக்திப்பாடல்கள் நூலமங்கலம் சகோதரிகள் திருமுறை இசை N. ஆறுமுக ஓதுவார் பரதநாட்டிய ஆசிரியர் P. S. குஞ்சிதபாதம் பிள்ளை நாட்டியக் கலைஞர் சித்ரா விசுவேசுவரன். திரைப்பாடகர் S. C. கிருஷ்ணன். இசை நாடக நடிகர் S. V. ராமமூர்த்தி. இசை நாடக நடிகை K.P. மெய்ஞான வல்லி. பழம்பெரும் இசை நாடகக் கலைஞர் A. K. காளீசுவரன், கரூர் நாரதகான சபை சிறந்த சபையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. ஏற்கெனவே கலைமாமணி பெற்று வறுமையில் உள்ள 12 கலைஞர்களுக்கு நிதி அமைச்சர் நெடுஞ்செழியன் பணமுடிப்பு வழங்குகின்றார். விழாவில் மறைந்த 14 கலை மேதைகள் படங்களையும் முதல்வர் திறந்து வைக்கின்றார். அதில் குளிக்கரை பிச்சையப்பா பிள்ளை, நாதசுரம், பரத நாட்டிய ஆசிரியர் பந்தணை நல்லூர் சொக்கலிங்கம் பிள்ளை, திரு. வி. க. இவர்கள் படங்களும் உள்ளன,

# நாதசுர தவில் இசைக்கருவிகளுக்கு கட்டணம்

## சோழன் போக்குவரத்தில் கெடுபிடி

இரயில் வண்டியிலும் பேருந்துகளிலும் நாதசுரம், தவில் மற்றும் இசைக்கருவிகளை எடுத்துச் செல்லும்போது தனிக் கட்டணம் (Luggage) வசூலிக்கும் வழக்கம் கிடையாது. அறிஞர் அண்ணா அரசு ஆட்சியில் இருந்த காலத்தில் சென்னை நகர போக்குவரத்தில் இசைக் கருவிகளுக்கு தனிக் கட்டணம் கேட்ட பொழுது உடனே அவர் அதனை ரத்து செய்தார், ரயிலில் தனிக் கட்டணம் சமீபத்தில் கேட்டபொழுது இயலிசை இதழும், மற்றும் சில கலைஞர்கள் சங்கங்களும் சம்பந்தப்பட்ட ரயில்வே அதிகாரிக்கு கடிதம் எழுதியதும் பின்னர் அது நிறுத்தப்பட்டுள்ளது. தஞ்சை, திருச்சி மாவட்டங்களில் ஓடும் சோழன் போக்குவரத்து பேருந்துகளில் தற்பொழுது தனிக்கட்டணம் வசூலிப்பதாக எங்களுக்கு தகவல் வந்துள்ளது. இதனை கண்டித்து பல இசைக் கலைஞர்கள் சங்கங்களும், சென்னை நாகஸ்வராளி என்ற சபையும் மாநில அரசு அமைச்சர் மற்றும் அதிகாரிகளுக்கு கடிதங்கள் எழுதி உள்ளனர். தமிழக அரசு உரிய நடவடிக்கை எடுக்க சகல கலைஞர்கள் சார்பில் இயலிசை வேண்டுகிறது.



முத்தமிழ்ப் பேரவையில் ஆடிய கனிமொழி, (M.B.B.S.)

# தலைநகர் கலை விழாக்கள்

தமிழக கலைகளான கர்நாடக இசைக்கும் பரத நாட்டியத்திற்கும் இந்த உலகம் முழுவதும் புகழ் பரவியுள்ளது. இக்கலைகளின் கேந்திரமாக சந்தையாக (Market) சென்னையே விளங்குகின்றது. வருடா வருடம் இந்நகரில் மார்கழி மாதத்தில் பல இசைச்சபைகளால் கொண்டாடப்படும் இசை விழாக்கள் நாடெங்கும், உலகமெங்கும் உள்ள ரசிகர்களின் கவனத்தை பெறுகின்றது இவ்வருடம் 17-12-82 முதல் 7-1-83 வரை பல இசைச்சபைகளால் கலைநிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டு இசைவிழா சிறப்புற நடைபெற்றது

சென்னை மியூசிக் அகடமியில் விழா 19-12-82 முதல் 4-1-83 வரை நடைபெற்றது. மத்திய ராணுவ அமைச்சர் R. வெங்கட்ராமன் துவக்கிவைத்தார். இசை மாநாட்டில் ஹரிகதை கலைஞர் விஜயராகவாச்சாரிக்கு "சங்கீத கலாநிதி" பட்டம் வழங்கப்பட்டது. நிகழ்ச்சிகள் அனைத்தும் குறித்த நேரங்களில் சிறப்பாக நடைபெற்றது. முன்நேர கச்சேரிகளில் பல புது கலைஞர்களுக்கு வாய்ப்பு கொடுத்திருந்தனர். அதில் ரவிகரன் கோட்டு வாத்தியம் மற்றும் சில நிகழ்ச்சிகளுக்கு கூட்டம் நிறைய இருந்தது. தினசரி காலையில் நடைபெற்ற இசை ஆராய்ச்சி கூட்டங்கள் கர்நாடக இசை பெருமைதனை அறிய உதவியது. பல பெரிய வித்வான்களும் அதில் கலந்து கொண்டது பாராட்டத்தக்கது அகடமியார் நாதசுர கச்சேரிகளை ஏன் மறந்தார்கள்? ரசிகர்கள் விரும்பும் பிரபலமான கலைஞர்களான மதுரைசோமு, பால முரளி, சீர்காழி, சிதம்பரம் S. ஜெயராமன், வீணை பாலசந்தர், வீணை சிட்டிபாபு, பி. வி. ராமன லட்சுமணன், திருவெண்காடு ஜெயராமன் ராதா ஜெயலஷ்மி இவர்களுக்கு ஏன் அங்கு இடமில்லை பழைய வித்வான் ஒருவர் அல்லது பலர் பிடியில் அக்கடமி இயங்குகின்றது என்று ஒருவாரப் பத்திரிகையில் வந்தது உண்மையா?

தமிழிசைச் சங்க விழா ராஜா அண்ணாமலை மன்றத்தில் 22-12-82 முதல் 2-1-83 வரை நடைப்பெற்றது சங்கத்தலைவராக உயர்நீதி மன்ற நடுவர் P. R. கோகுல கிருஷ்ணன் முதல் நாள் பதவிஏற்க மத்திய துணை அமைச்சர் R. V. சுவாமிநாதன் இசை விழாவினை துவக்கி சீர்காழி S. கோவிந்தராசனுக்கு "இசைப் பேரறிஞர் பட்டம் வழங்கினர் நன்றியுரையில் சங்க செயலாளர் பேராசிரியர் இராமநாதன அவர்கள் சீர்காழியாரை பாராட்டி அவர் வேறு மேடைகளிலும் தமிழ்ப்பாடல்களே பாட வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். சீர்காழியார் பெரும்பாலும் தமிழ் பாடல்கள் பாடி வருபவர்தான் தமிழிசை விழாவில பாடும் கலைஞர்கள் எல்லாம் தமிழ்ப் பாடல் மட்டுமே பாடவேண்டும எனப் பேராசிரியர் கேட்டிருந்தால் தமிழிசை ஆர்வமுள்ளவர்களுக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும், பொதுவாக நிகழ்ச்சிகள் அனைத்தும் சிறப்பாக இருந்தன, மதுரை சோமு, லால்குடி ஜெயராமன் தனி வயலின் கச்சேரிகள் நாதசுர கச்சேரிகள் விழாவின சிகரங்கள் பெண்கள் குழுவாக அமர்ந்து திருப்புகழ், பிரபந்தம் பாடுவது எடுபடவில்லை திருவருட்பாவை புறக்கணிப்பது ஏனோ? ஆரம்ப நாளன்று நாதசுரம் வாசித்த மாயுரம் சிறுவர்கள்வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொள்ளவில்லை

(தொடரும்)

# நடனக்குழு வெளிநாடு பயணம

நடைபெற்ற பாரதியார் நூற்றாண்டு விழாவினை யொட்டி பாரதி பாடல்கள் கலந்த நடன நிகழ்ச்சிகளை நடத்த மத்திய அரசும் மாநில அரசும் ஏற்பாடு செய்து தமிழக நடன குழு ஒன்றினை வெளிநாடுகளுக்கு அனுப்பி உள்ளனர். இவர்கள் ஆஸ்திரேலியா, மலேசியா, பிஜி தீவுகள் ஆகிய நாடுகளில் பதினைந்து நாட்கள் சுற்றுப்பயணம் செய்து நடன நிகழ்ச்சிகள் நடத்துவர். இக்குழுவில் நடன ஆசிரியை உமா தண்டாயுதபாணி, நாகநந்தினி, சந்திரசேகரன், புவனேஸ்வரி, சுபதரா மிருதங்கம் V. P. ராமதாஸ், ஆர் மோனியராமமூர்த்தி உள்ளனர்,

கலைத் தொடர் கதை

# அடலரசி அமராம்

## 2. கலைஞனும் ரசிகனும்

அக்கால வித்வான்கள் பந்தாவே தனிரகம்தான் 8 முழம் மல்வேஷ்டியை ஒற்றையாக பிரித்து தனித்தனியே கால்களுக்கு சுற்றி நடுவில் மடிசார் புடவை போல் கொசுவம் வைத்து கட்டிக் கொள்வார்கள் இதற்கு பஞ்சகச்சம் என்பார்கள் மன்னர்கள் உடை போல் இருக்கும் இப்போழுது வித்வான்களுக்கு அந்தப் பழக்கம் இல்லை. அப்பொழுது அது கட்டினால்தான் கௌரவம் சில வித்வான்களுக்கு பஞ்சகச்சம் கட்டிக் கொள்ள தெரியாது அதற்காக உடன் ஆட்களை அழைத்து வருவதும் உண்டு. மேலே சில்க் ஜிப்பா அல்லது சட்டை அதன் மேல் நாலுவிரல்கரை ஜரிகைத் துண்டு கழுத்தில் தங்க செயின் அப்பொழுது பவுன் விலை ரூபாய் பத்துதான் காதில் கடுக்கண் பெரும்பாலும் வைரமாக இருக்கும் தலை நிறைய முடி வைத்து மேல்வாக்கில் வாரியிருப்பார்கள் அதற்கு தான் பாகவதர் கிராப் என்று பெயர் நெற்றியில் பவுடர், விபூதி, சந்தனப் பொட்டு, அதன்மேல் குங்குமம் புருவத்தில் அத்தர் ஜவ்வாது இன்னும் சட்டைமேல் வாசனைத் திரவியங்கள் சில வித்வான்கள் கண்களில் மையும் இட்டுக் கொள்வதுண்டு, வாயில் மணக்கும் தாம்பூலம் வெற்றிலைச் சீவல் புகையிலை அதற்காக கையில் வெற்றிலைப்பெட்டி காலிலே கனமான செருப்பு பெரும்பாலும் காலுறை SOCKS போட வேண்டாத சிங்கப்பூர் சுட்டுவாக இருக்கும், பெயருள்ள வித்வான்கள் பின்னால் ஒரு கூட்டம் பாதி சீடர்கள் மீதி ரசிகர்கள் ஒன்றிரண்டு பெரிய மனிதர்களும் இருப்பார்கள் பெண் கலைஞர்களைப் பற்றி வேறு பகுதியில் காணலாம். ஆக இந்த பந்தாவிலேயே மக்களைப் பாதி கவர்ந்து விடுவார்கள்.

இத்தனையையும் தனது வசதி குறைவு காரணமாக செய்துகொள்ள முடியவில்லை யென்றாலும் முடிந்த வரை பந்தாவுடன் வந்திருந்தார் தஞ்சாவூர் பஞ்சாட்சர பாகவதர் அவருக்கு சுப்புணியைக் கண்டதும் முகம் மலர்ந்தது சுப்புணிக்கு அகமும் மலர்ந்தது இவர்கள் ஒருவருக்கு ஒருவரால் ஆகிக் கொள்ள வேண்டியது அப்படி ஒன்றும் பிரமாதமாக இல்லை இருந்தாலும் இருவருக்கும் மகிழ்வு நல்ல கலைஞனும், ரசிகனும் சந்தித்துக் கொண்டால் வரும் நிகழ்வு காசு கொடுப்பவன் எவனோ கலையை அறிந்து மகிழ்பவன் எவனோ.

அதிலும் சமையல் காரனுக்கும் சங்கீதகாரர்களுக்கும் தனி தொடர்பு உண்டு. கலைஞர்களுக்கு உணர்வு அதிகம் நாக்கும் நீளமாக இருக்கும் சமையல்காரனுக்கு நல்ல ரசனை இருக்க வேண்டும் இருந்தால் சமையல் சரியாக இருக்கும் இந்த இரு தொழிலாளர்களும் பல இடங்களில் திருமண் இதர வீட்டு விழாக்களில், ஆலய உற்சவங்களில் சந்தித்துக் கொள்வார்கள். அப்பொழுது கலைஞர்களை திருப்தி படுத்துவது தலைசுபிள்ளை என்னும்சமையல் காரரே அக்கால கலைஞர்கள் ஒருவரை யொருவர் சந்தித்துக்கொண்டால் கச்சேரிக்கு போய் வந்தீர்களா? என்ன வாசித்தீர்கள் எவ்வாறு கேட்டார்கள்–எவ்வளவு கொடுத்தார்கள் என்பதெல்லாம் முதலில் கேட்க மாட்டார்கள் ஜாகை (தங்குமிடம்) சாப்பாடு உபசரிப்பு எல்லாம் சௌகரியமாக இருந்ததா என்று தான் கேட்பார்கள் இவையெல்லாம் சரியாக இருந்து நல்ல ரசிகர்களையும் பார்த்து விட்டால் அன்று கச்சேரி படு அமர்க்களமாக இருக்கும் சன்மானம் ஏறத்தாழ இருந்தாலும் கவலைப்பட மாட்டார்கள் கலைஞர்கள்.

இந்த சாப்பாடு மந்திரத்தில் தான் பல கலைஞர்களைக் கவர்ந்து அவர்கள் நட்பினைப் பெற்றிருந்தான் சுப்புணி சில கலைஞர்கள் விழாக்காரர்களிடம் இவனது சமையலுக்கு சிபாரிசு செய்வதும் உண்டு. புது கலைஞர்கள் என்றால் அவர்களைப் பற்றி தெரிந்து கொள்ள வேண்டும் பார்க்க வேண்டும் என விரும்புவது அவனது இயற்கை சுபாவம்

"நமஸ்காரம் எப்ப ஊரிலிருந்து வந்தீர்கள்" சுப்புணி,

"வாய்யா சுப்புணி......உன் வத்தக்குழம்பையும் தேங்காதுவையலையும் சாப்பிட்டு ரொம்ப நாளாச்சு நாக்குசெத்து போய் கிடக்குது" பாகவதர்.

அந்தக் காலத்தில் எந்த கலைஞனும் கேட்ட கேள்விக்கு சட்டென்று பதில் சொல்ல மாட்டான். அது ஒரு பந்தா! சுப்புணிக்கு தனது சமையலை அவர் பாராட்டுவது பற்றி கூட அக்கரை இல்லை. பஞ்சாட்சர பாகவதரிடம் ஏராள 'சரக்கு' இருக்கின்றதே. கேட்டு தெரிந்து கொள்ள வேண்டும் என்ற அக்கரைதான்.

"அதற்கென்ன ஆத்துக்கு வாங்க. வத்தகுழம்பு வச்சிடலாம்" என்று பாகவதரை அழைத்தான்.

'மன்னிக்கனும் சுப்புணி நேற்றுதான் மெயில்லே வந்தேன். குப்பையர் வீட்டில்தான் ஜாகை அங்கு சௌகர்யத்துக்கு சொல்லனுமா. அவர் வீட்டில்தான் இன்றைக்கு திரௌபதி மானசம்ரட்சனம் காலட்சேபம் சாயங்காலம் வநதிடனும்"

அப்பொழுது பஸ் வசதி கிடையாது. தஞ்சை மாவட்ட மக்கள அதிகம் பயன்படுத்தியது ரயில்தான் உள்ளே இருக்கும் கிராமங்களுக்கு செல்ல வில்வண்டி, வசதியான குதிரை அல்லது மாட்டு வண்டி பயன்படுத்தினர்கள். வசதியில்லாதவர்கள் பல மைல்கள் நடந்தே சென்று விடுவார்கள் பழக்கம்.

குப்பையர் என்று பாகவதர் சொன்ன கும்பகோணம் குப்புசாமி அய்யருக்கு நிறைய நில புலன் சொத்து உண்டு. வருடா வருடம் மகத்திறகு வெளியூர் உள்ளூர் சொநதக்காரர்களை அழைப்பார் ஆறு பெண்கள் நல்ல இடத்தில் கொடுத்து விட்டார். இரண்டு பையன்கள் பெரிய இடத்தில் சம்பந்தம் செய்துள்ளார் இவ்வளவு தலைக்கட்டுகளும் மகத்துக்கு சேர்ந்து வரும். தலைசுப்பிள்ளை வைத்து சமையல் செய்வார், சாப்பாடு மிகுந்து விட்டால் அன்னதானமும் செய்வார்! மாலையில் தனது தெருவடைத்து பந்தல் போட்டு கதாகாலட்சேபம் வைப்பார். சென்ற வருடம் பாகவதர் வந்து காலட்சேபம் செய்தார் அவரை குப்பய்யருக்கு பிடித்து விட்டது. அன்று அவர் சொன்ன திரௌபதிமானசம்ரட்சனம் கதைக கேட்டு மிகவும் பரவசமானர் கௌரவர் சபையில் திரௌபதி துகலை துச்சாதனன் உரிதத மகாபாரத கதைதான் அது. இந்த ஆண்டும் அவரது நிகழ்ச்சியே ஏற்பாடு செய்து விட்டார். அதே கதைதான.

சுப்புணிக்கு சென்றாண்டு அவர் வநத விபரம் தெரியும். இவ்வாண்டு வரும் விபரம் தெரியாது. யதார்ததமாக பாகவதரிடம் 'என்ன அய்யருக்கு திரௌபதி அம்மா மீது பகதியா அதே கதையே மீண்டும் வச்சிருக்காரே என்று கேட்டான்.

பாகவதர் கொஞ்சம் லேசாக சிரித்துக் கொண்டார். அக்கால வித்வான்களுக்கு குறும்பு அதிகம் "ஐய்யருக்கு அம்மன் பக்தி அதிகம் அதனால்தான் பகவான் அதிக பெண் குழந்தைகளைக் கொடுத்திருக்கான். திரும்ப அதே கதையைக் கேட்டா சொல்லிவிடுப் போறது. சன்மானம் வநதா சரி..." என்றார்.

இருந்தாலும் சுப்புணி விட்டபாடில்லை. சங்கீதகாரர்களைக் கிண்டினால் நிறைய சமாச்சாரம் வரும் என்ற ஆவல்.

"பாகவதர்வாள்! திரும்ப திரும்ப சொன்ன புராணங்களையே சொல்றீங்களே, புதுசா ஏதேனும் சொலலக் கூடாதா?" என்று கேட்டான்.

பஞ்சாட்சர பாகவதர் ஒரு முறை கனைத்துக்கொணடார்.

"இப்படித்தான் தமிழ் வித்வான் வேதாசலம் பிள்ளையும் கேட்டார்" என்று சொல்லிவிட்டு சாலை ஓரமாக சென்று வாயில் இருந்த தாம்பூலத்தைத் துப்பி விட்டு கையிலிருக்கும் வெற்றிலைப் பெட்டியைத் திறந்தார். உடனே சுப்புணி பய பக்தியுடன் வெற்றிலைப் பெட்டியை திறநதவாறு வாங்கி அவர் எதிரில் பிடித்து நின்றான். பாகவதருக்கு அவனது செய்கை மிகவும் வசதியாகவும் பிடித்தமாகவும் இருந்தது வெற்றிலைச்சீவல் போட்டு, பன்னீர் புகையிலையையும் வாயில் அடக்கிக் கொண்டு ஆரம்பித்தார்.

"போன மாதம் காரைக்குடிக்கு ஒரு கச்சேரிக்கு போயிருந்தேன். அங்குதான் வித்துவான் வேதாசலம் வந்திருந்தார் அவர் மிகுந்த தமிழ்பற்று உடையவர். கதை முடிந்ததும் என்னிடம் குத்தலாக 'தமிழர் என்கிறீர். தமிழே சரியில்லையே. கதையில் வரும் பாட்டெல்லாம் தெலுங்கு, சமஸ்கிருதமாக இருக்கின்றதே தமிழ் பாடல்கள் இல்லையா என்று கேட்டார். உடனே நான் என்ன செய்வது. எனது தந்தையார் எனக்கு தமிழ் வித்வான் படிப்பு கற்றுத்தரவில்லை தெலுங்கு, சமஸ்கிருதம் கற்றுக் கொடுத்தார். எனவே நிறைய பதங்கள் கீர்த்தனங்கள் அதில் தான் வருகின்றன. அது இருக்கட்டும் தாங்கள் தமிழில் பெரும் படிப்பு படித்திருக்கின்றீர்களே அந்த மேதா விலாசத்தைக் குறிக்க தமிழ் வார்த்தைகளே இல்லையா விதவான்என்ற சமஸ்கிருத வார்த்தையை வைத்துக்கொண்டு இருக்கின்றீர்களே என்று கேட்டேன், அவர் சிந்தனை செய்ய வேண்டிய கருத்துதான என்றார்.

பின்னர் அவர் ஒரு கேள்வி கேட்டார். "பாஷை இருக்கட்டும் திரும்ப திரும்ப ராமாயணம் மகாபாரதம் கதைகளே சொல்றீங்களே. நமது தமிழ் ஐம்பெருங்காப்பியங்கள், மூன்னோர் மூவேந்தர் வரலாறு எல்லாம் இல்லையா ?"

அவர் கூறியதும் சரியாகத் தான் எனக்கு பட்டது. இதற்கும் காரமாக பதில சொல்ல நான் விரும்பவில்லை. 'அது ஒரு வசதிக்கு தான், ராமாயாணம் மகாபாரதம் புராணங்களில் பொதுவா ஒரு கதை இருந்தாலும் பல கிளை உப கதைகள் உள்ளன. இடையில் நாமும் கொஞ்சம் கைசரக்கும் விடலாம் காப்பியங்களில் இதுதான் கதை என்று சரியா அழகா எழுதி வெச்சிட்டாங்க நாம்ம ஏதேனும் சொல்லி விட்டால் உங்களைப் போன்ற தமிழ் வித்வான்கள் சும்மா விடுவார்களா' என்று கேட்டேன். அவர் என்னை பலே பாகவதர் என்று பாராட்டி எனது கருத்தை ஒப்புக் கொண்டார்,

சுப்புணிக்கு இதற்கு மேலும் விளக்கம் கேட்க விரும்பவில்லை. வேறு திசையில் பேச்சைத் திருப்பி விட்டான்.

(தொடர்ச்சி 3-ம் பக்கம்)

(2-ம் பக்கத் தொடர்ச்சி)

'பாகவதரே, இன்றைக்கு சதுர் கச்சேரிக்கு பந்தனை நல்லூரி லிருந்து அபிராம சுந்தரி வர்ராங் களே. நீங்க அவங்க ஆட் டத்தைப் பார்த்திருக்கிறீர்களா?

அபிராமி என்ற பெயர் கேட் டதும் பாகவதர் முகம் மலர்ந் தது. இருந்தாலும் நேரடியாக பதில் வருமா?

"சுப்புணி, கோடியிலே ஒரு வன் ஞானி. அவன் எந்த கோடியிலே இருப்பான் தெரி யாது. லட்சத்திலே ஒருத்தன் கலைஞன். அவன் எந்த லட்சியத் திற்கு வாழ்கிறான் என்று தெரி யாது. லட்சத்திலே ஒருத்தி அபி ராமி. அவளைப் பெற்றதுபந்தனை நல்லூர்பங்கஜமில்லை சாட்சாத் சரஸ்வதி தேவிதான்."

பொதுவாக எல்லா கலைஞர் களையும் குறைத்து பேசும் பஞ் சாட்சர பாகவதர் அபிராமியை பற்றி இவ்வளவு உயர்வாக கூறியது கேட்டு சுப்புணிக்கு சிலிர்த்தது. அவளைப் பார்க்கும் ஆவல் மேலும் கூடியது.

இந்நேரம் அவர்கள் நடந்து பெரிய வீதிக்கு வந்து சேர்ந் தனர், அவர்கள் பேச்சினைத் தடை செய்தவாறு ஒரு சாரட் குதிரை வண்டி அவர்களைக் கடந்து சென்றது. அதில் அரச குமாரன் போல் ஒரு இளைஞன் நடுத்தரவயது உடைய ஒருவன் ஆக இருவர் கம்பீரமாக அமர்ந் திருந்தனர். பஞ்சாட்சர பாகவ தரை அவர்கள் கவனிக்க அவர் 'நமஸ்காரம்' என்றார். பதிலுக்கு அவர்களும் ஒரு மரியாதைக்கு கையை ஆட்டினர்.

சுப்புணி பாகவதரிடம் "புதுக் கோட்டை இளையராசா போல இருக்கின்றதே' என்று கேட் டான்.

பாகவதர், "ஆமாம் அவரே தான், அபிராமி ஆடும் இட மெல்லாம் இளையராசாவும் வரு வார். இவரைக் கண்டால் அவ ளுக்கும் பூரிப்பு தான். ஆட்ட மும் அமர்க்களமாக இருக்கின் றது."

"அப்படியென்றால் அவர்களுக் குள் ஏதேனும்........." என்று இழுத்தான் சுப்புணி,

பாகவதர் பட்டென்று 'இரு வருமே நல்லவர்கள். அப்படி ஒன்றும் நான் கூறமாட்டேன். கலைஞன் ரசிகன் உறவாக இருக்கலாம். எப்படி இருப்பி னும் விளக்கினைச் சுற்றி வரும் விட்டில் பூச்சி கதையாகி விடக் கூடாது" என்றார்.

'யார் விளக்கு. யார் விட்டில் பூச்சி' சுப்புணியின் கேள்வி.

"கதை இப்பொழுது தானே ஆரம்பமாகி உள்ளது. போகப் போகத்தான் நாம் புரிந்து கொள்ள வேண்டும்" என்றார் பாகவதர்.

(தொடரும்)

## குடியரசு நாளில் சென்னையில் திருப்புகழ் விழா




சென்னை அடியார் திருக் கூட்ட இறைபணி மன்றம் கடந்த 26 ஆண்டுகளாக சென் னையில் குடியரசு ஜனவரி 26ந் தேதியில் பூக்கடை சென்ன கேசவ மல்லீஸ்வரர் ஆலயத் தில் திருப்புகழ் திருவிழா, தொடர் இசையரங்கம் நடத்தி வருகின்றனர். இவர்கள் வருடந் தோறும் திருவண்ணாமலை, திருச் செங்கோடு, திருப்போரூர், திமிரி ஆகிய தலங்களுக்கும் சென்று திருப்புகழ் படிவிழா நடத்துகின்றனர்.

இவ்வாண்டு சென்னை திருப் புகழ் விழா காலை 4-30 முதல் இரவு 12 மணி வரை நடை பெறும். பித்துக்குளி முருகதாஸ், தருமபுரம் P. சுவாமிநாதன், குடந்தை லட்சுமணன், தரும புரம் ஞானப்பிரகாசம், காஞ்சி புரம் விநாயகம் & புண்ணிய கோடி, சைதை நடராஜன் & பாலசுந்தரம், லால்குடி M. சுவாமிநாதன, புரசை E. அருணகிரி, திருமதி ராதா கிருஷ்ணமூர்த்தி, பவானி அம் மையார், T. R. கண்ணன, பாலசுப்ரமணியம் & SS சிவ குமார, P. ராமையர் மற்றும் பல திருப்புகழ் சபைகளும் பாடு கின்றனர். விழா ஏற்பாடுகளை மன்றத் தலைவர் டாக்டர் P. S C. மணி செய்துள்ளார் வளர்க அவர் தொண்டு.

## லண்டன் தமிழரின் தேவார இசை அரங்கேற்றம்

லண்டன் சைவ சித்தாந்த தலைவர் திரு. K. ஞானசூரியன் M Sc. அவர்கள் தமிழகம் வந்து தேவார இன்னிசையைக் கற் றுள்ளனர். அவரது இன்னிசை அரங்கேற்றத்தினை சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றம் 15-1-83 அன்று மாலை தியாகராய நகர் தருமபுரம் ஆசின சமயப் பிரச்சார நிலையத்தில் நடத்து கின்றனர். சைவத் தமிழ்மணி K. ஞானசூரியன் அவர்களுடன் சைதை நடராஜன் T S தண்ட பாணி தேசிகர் திருமுறை இசை வழங்குவர். பேராசிரியர் P. திருஞானசம்பந்தன் MA. உரையாற்றுவார். தருமபுர ஆதினம் தவத்திரு சுவாமிநாத தம்பிரான் கி. இராமலிங்கனார் MA. இவர்கள் ஆசியுரை வழங் குவர், மன்ற செயலாளர் டாக் டர் ஜ. அண்ணாமலை நன்றி கூறுவார்.

## குடியாத்தம் இசைக் கலைஞர்கள் சங்க மும்மூர்த்திகள் இசை விழா



தியாகராஜ சுவாமிகள், முத்து சாமி தீட்சதர், சியாமா சாஸ்திரி கள் இவர்கள் கர்நாடக சங்கீத மும்மூர்த்திகள் எனப்படுவர். இவர்கள் ஆராதனை விழாவினை எட்டாவது ஆண்டாக கடந்த 12-1-83 அன்று வட ஆற்காடு மாவட்டம் குடியாத்தம் இசைக் கலைஞர்கள் சங்கம் சிறப்பாக நடத்தினர். மாலை டாக்டர் N. ரமணி குழுவினர் புல்லாங் குழல் கச்சேரி இரவு திருச்சி A. K. C. நடராசன் கிளாரினட் பந்தநல்லூர் சீனுவாசன் நாத சுரம் கச்சேரி நடந்தது தென் சித்தூர் S. N. சுந்தரம், மன்னார் குடி M. R. வாசுதேவன் இவர் கள் தவில்கள் வாசித்தனர் விழாவில் நகர பிரமுகர்கள் K. M. கோவிந்தராசனார், ஸ்ரீ லட்சுமி சரசுவதி நிறுவனங்கள் R. ஸ்ரீஹரி, R. பரந்தாமன், சங்கத்தலைவர் N. சீராமன் மற் றும் இசை அன்பர்கள், பொது மக்கள் திரளாகக் கலந்து கொண்டனர். கடம் D. C. அருணகிரி, தவில் T. V. ராஜேந் திரன் மற்றும் சங்க நிர்வாகிகள் விழா ஏற்பாடுகளைச் செய்திருந் தனர்.

## இந்திய கலாசார சிறப்புகளை உலகம் அறியச் செய்யும் V. G. P. வீடியோ விஷன்

புத்தாண்டு தினத்தன்று விஜிபி இல்லத்தில் பத்திரிகையாளர் கூட்டம் டாக்டர் ஏ. என். பெருமாள் தலைமையில் நடைபெற்றது.

அனைவரையும் வரவேற்று வி. ஜி. பன்னீர்தாஸ் பேசியதாவது-

விஜிபி வீடியோ விஷன் ஆஃப் இந்தியா மூலம் இந்திய நாட்டுக் கலாச்சார சிறப்புக்களை உலகம் முழுவதும் அறியச் செய்து வருகிறோம். இதன் மூலம் கணிசமான அளவு அந்நியச் செலாவணி நம்நாட்டுக்குக் கிடைக்கிறது.

நமது சங்ககால கைவினைப் பொருட்களை உற்பத்தி செய்து கலைஞர்களை வாழ்விக்கவும், நமதுக் கலைச் செல்வங்களை உலகம் முழுவதும் விற்பனை செய்யவும் விஜிபி வர்த்தகக் கலைக் கிராமத்தை ஆரம்பிக்கின்றோம்.

விஜிபி வீடு கட்டும் திட்டத்தைப் பாராட்டிய அரபு நாட்டு ஷேக், தங்கள் நாட்டில் 20,000 வீடுகள் கட்டிக் கொடுக்குமாறு கேட்டுக்கொண்டார். ஆனால் அரபு நாடுகளில் பணியாற்றும் இந்தியர்கள் ஓய்வு பெற்று தங்கள் தாய்நாடு திரும்பியதும், அவர் கள் தங்கள் சொந்த ஊர்களில் வீடுகள் கட்டிக்கொண்டு வாழ வசதி செய்து கொடுக்க வேண்டும் என்று யோசனை கூறினேன். இந்த யோசனையை அவர் ஏற்றுகொண்டு இத்திட்டத்துக்கு தேவையான இரும்புத் தளவாடங்கள், இயந்திரங்கள் மற்றும் சிமெண்ட் ஆகியவற்றை தேவையான அளவு அனுப்புவதாகச் சொன்னார்.

சென்ற ஆண்டு (1981) எழுத்தாளர்களுக்கான பரிசு ரூ 1000/-ம் சிறப்பு பாராட்டு விருதும் டாக்டர் பெருமாளுக்கு விஜிபி சகோதரர் கள் வழங்கினார்கள்.

1982-ம் ஆண்டுக்கான பரிசு பெறும் கீழ்க்கண்ட எழுத்தாளர் கவிஞர், பத்திரிக்கையாளர், ஓவியர் ஆகியோரின் பெயர்களை வி. ஜி. சந்தோஷம் அறிவித்தார்.

1. திரு. சாவி
2. திரு. வாசவன்
3. திரு. வலம்புரி ஜான்
4. திரு. ஆற்றலரசு
5. திரு. முத்து
6. திரு. ராமு
7. திரு. வரதராஜன்
8. திரு. எஸ். வி. ரமணி
9. திரு. குண்டூசி இராதா கிருஷ்ணன்
10. திரு. கலைப்படம் வேலவன்
11. திரு. கோவி மணிசேகரன்
12. திரு. பெருங்கவிக்கோ வா. மு. சேதுராமன்
13. திரு. புதுநேரி சுப்ரமணியம்
14. திரு. ஓவியர் தாமரை
15. திரு. ஜி. கே. மூர்த்தி
16. திரு. டி. சேஷாத்திரி (புகைப்பட கலைஞர்)

வி. ஜி. செல்வராஜ் பேசும் போது, துபாயில் இந்தியா - துபாய் கூட்டுமுயற்சியில் விஜிபி நிறுவனத்தின் வீடு கட்டும் திட்டத்துக்கு நல்ல ஆதரவு இருப்பதாக கூறினார்.

அமுதசுரபி ஆசிரியர் விக்ரமன், மங்கையர் மலர் ஆசிரியை மஞ்சுளா ரமேஷ்; வாசவன், சா. கணேசன், மகரம் ஆகியோர் பேசினர்.

விஜிபி ரவிதாஸ் நன்றி கூறினார்.

TN / MS(S) 266
'IYALLISAI' Musical Bi-Monthly Printed by T. Thirunavukarasu at Jayalakshmi Art Printers, Kavarai street, Vadapalani Madras 26 Published & Edited by M. Lakshmi, 57 South Sivan Koil Street, Kodambakkm, MADRAS 600 024.




## ஸ்ரீ உச்சிஷ்ட கணபதி பக்தி பாடல்கள்

### இசைச்சுட்டி வெளியீடு

தஞ்சாவூரில் உள்ள ஸ்ரீ உச்சிஷ்ட கணபதி மீது ஸ்ரீ ராமானன்தேந்திர சரசுவதி சுவாமிகள் எழுதிய சுப்ரபாதம் முதலிய பாடல்களை M. ரங்கராவ் இசையமைப்பில் திருமதி சியாமளா சிவராமன் பாடிய இசைச்சுட்டி (காசட்) வெளியீட்டு விழா சென்னை மயிலை பாரதீய விதயா பவனை 27-12-82 அன்று நடைபெற்றது உயர் நீதிமன்ற பழைய நடுவர் T. ராம பிரசாத்ராவ் தலைமையில் சௌந்தரா கைலாசம் வெளியிட T. S. பார்த்தசாரதி பெற்றுக் கொண்டார். உயர்நீதிமன்றநடுவர்கள் பலரும் கலந்துகொண்டனர்ஸ்ரீராமானன்கதேந்திர சரசுவதி சுவாமிகளும் கலந்துக் கொண்டார். N. V. ராகவன் நன்றி கூறினர். இதுஒருசங்கீதா வெளியீடு.




## தமிழக நாதசுரக் கலைஞருக்கு

### ஈழத்தில் பாராட்டு

ஈழத்தின் பிரசித்தி வாய்ந்த, ஈழத்துச் சிதம்பரம், என்கின்ற யாழ்ப்பாணம் - காரைநகர் சிவன் தேவஸ்தானத்தில், மார்கழி மாதத் திருவாதிரைத் திருநாளின் முதல் நாள் நடைபெற்ற பஞ்சரதோற்சவப் பெருவிழாவின்போது, தமிழகம் நாதஸ்வரமேதை, ஆண்டாங்கோவில் ஏ. வி. செல்வரத்தனம் ... மழை பொழிந்து அடியார்களை இசை ... வைத்தார். இவருக்கு தேவஸ்தானத்தார் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தனர். இக்கௌரவிப்பு வைபவத்தில், தவில் வித்வான்கள் என். ஆர். சின்னராஜா. கே. கணேசபிள்ளை, ஆர். புண்ணியமூர்த்தி, திரு. குமரகுரு ஆகியோரும், மற்றும் நாதசுரக் கலைஞர்களும், ரசிகர்களும் கலந்து சிறப்பித்தனர்.

கோண்டாவில் கானமூர்த்தி-பஞ்சமூர்த்தி சகோதரர்களும், சுங்கப்பகுதி அதிகாரி திரு கே. கே. சுப்பிரமணியம் அவர்களும் கொழும்பு விமான நிலயத்தில் திரு. செல்வரத்தினத்தை வரவேற்றனர், இவரது நிகழ்ச்சியை இலங்கை வானொலியும் அஞ்சல் செய்தமை குறிப்பிடத்தக்கதாகும்.

(தகவல்—தேவார இசைமணி திருஞான சம்பந்தன்.)



## திருச்சியில் கும்பாபிஷேகம்

### மலைக்கோட்டையில் கலை நிகழ்ச்சிகள்

திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டையிலுள்ள அருள் மிகு தாயுமான சுவாமி கோவில் குட முழுக்கு விழா வரும் 26-1-83 காலை 10-15 மணிக்கு நடைபெற உள்ளது. திருப்பணி விழா குழுதலைவர் K. K. நடராச அய்யர் குடமுழுக்கினை யொட்டி கலை நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்துள்ளார்.

**24—1—83**

| | |
|---|---|
| மாலை 5 மணி : | திருமுருக கிருபானந்தவாரியார் சொற்பொழிவு |
| 7 | திருவிழா ஜெய்சங்கர் நாதசுரம் |
| | வலையபட்டி சுப்ரமணியம் தவில் |

**25—1—83**

| | |
|---|---|
| மாலை 5 மணி : | புலவர் கீரன் சொற்பொழிவு |
| „ 7 „ | சிறுவன் சீனுவாசன் மாண்டலின் கச்சேரி. |

**26—1—83**

| | |
|---|---|
| காலை 10-15 : | A. K. C. நடராஜன் குழுவினர் கிளாரினட் இசை |
| இரவு 7 மணி | சீர்காழி S. கோவிந்தராசன் குழுவினர் |
| „ 10 „ | பழநி S. லட்சுமி நரசிம்மய்யர் குழுவினர் நாதசுரம் |

## இசை பாடும் கடிதங்கள்

'இயலிசை' இதழ் மென்மேலும் ஓங்கி வளர்ந்து, இசைத் துறைக்கு சிறந்த சேவைகளைத் தொடர்ந்து செய்து வர வேண்டும் என வாழ்த்துகிறேன்.

'சங்கீதகலாநிதி' —எம்பார் S. விஜயராகவாச்சாரியார், ஸ்ரீரங்கம்

தங்கள் இசைத்தொண்டு வெல்க. சிறப்பான தொண்டு இசையுலகு, மாணவர்கள், பாடலாசிரியர்கள், இசைப புலவர்கள் யாவரும் விரும்பி வரவேற்கும் பணி.

—'இசைப்பேரறிஞர்' S. இராமநாதன், சென்னை

முயலாத திசையில் சென்று
முத்தமிழ் இசையைக்கொண்டு
பயனுள்ள வகையில் நல்ல
பைந்தமிழ் ஏடு கண்டு
வியப்புற வைத்தார்! நம்மின்
விருப்பத்தை பூர்த்தி செய்தார்!
'இயலிசை' யாம அவ்வேட்டை
இதயத்தில் வாழ்த்துவோம்!

—கவியன்பன், பல்லவபுரம்

'ஆடலரசி அபிராமி' கதை ஒரு தனி ரகம்! இசையார்வம் உடைய அனைவரும் படிப்பர் B. கார்த்திகேயன், காஞ்சிபுரம்.

இசைத்துறை பற்றி தெரிந்து கொள்ள தங்கள் பத்திரிகை உதவியாக இருக்கும்.

—'கானபூஷணம்' M. கஸ்தூரிபாய், பாலக்காடு

## ஈழ ஓதுவார் திருஞானசம்பந்தன் இசைச்சுட்டி

### வாரியார் சாமிகள் விளக்க உரையுடன் பதிவு

அகில இலங்கைத் திருமுறை மன்றத்தினர் திருமுருக கிருபானந்தவாரியார் விளக்கவுரையுடன் யாழ்ப்பாணம் தேவார இசைமணி R. திருஞானசம்பந்தம் அவர்களை திருமுறைப் பாடல்களைப் பாட வைத்து இசைச்சுட்டியில் (காசட்) ஒலிப் பதிவு செய்துள்ளனர். அதில் பின்னிசையில் இலங்கையில் புகழ் பெற்ற நாதசுரக்கலைஞர் N. K. பத்மநாபன் நாதசுரமும், தலைல சு. அரியநாயகம் புல்லாங்குழலும், திருமதி கோமதி அம்மையார் பெட்டியும், செல்வன் பா. கண்ணன் வயலினும் C. V. ராஜேந்திரன் மிருதங்கமும் வாசித்துள்ளனர்.



இந்த இசைச் சுட்டியின் வெளியிட்டு விழா விரைவில் சிறப்பாக நடைபெற உள்ளது. ஒலிப்பதிவு விழா ஏற்பாடுகளை மன்ற செயலாளர் கா. இரகுநாதன், அமைப்பாளர் சி. கிருஷ்ணமூர்த்தி செய்துள்ளனர் ஈழத்திலேயே பாதிவாகி வாரியார் விரிவுரையுடன் வெளிவரும் முதல் இசைச் சுட்டி இதுவே. மன்றத்தாருக்கு இயலிசையின் வாழ்த்துகள்!

## சென்னை ஸ்ரீ காளிகாம்பாள் கோயில் கும்பாபிஷேக கலை நிகழ்ச்சிகள்

சென்னை தம்புச்செட்டித் தெருவில் இருக்கும் மிகவும் பழமையான கோவிலான ஸ்ரீ காளிகாம்பாள் கமடேசுவரர் கோவில் திருப்பணி முடிந்து குடமுழுக்கு விழா, சனவரி 16 முதல் 21 வரை நடைபெற உள்ளது இக்கோயிலுக்கு மராட்டிய மாமன்னன் வீர சிவாஜி வந்து தரிசித்த பெருமை உண்டு. குடமுழுக்கு விழாவில் அமைச்சர் R. M. வீரப்பன், புது சங்கராச்சாரிய சுவாமிகள் அறநிலயத்துறை ஆணையாளர் R. சண்முகசிகாமணி தவத்திரு இராமதாஸ் சுவாமிகள் ஆகியோர் கலந்து கொள்கின்றனர். தினசரி நடக்கும் கலை நிகழ்ச்சிகளில் திருமுருக கிருபானந்த வாரியார், M. S. விஸ்வநாதன், சங்கர்-கணேஷ், K. வீரமணி, வில்லு பாட்டு சுப்பு ஆறுமுகம், N. C. சவுந்தரவள்ளி, நாகை நடராசன், ரகுமாயிராமன், V. S. பூமிநாதன், நாதசுரம் R. சுப்ரமணியம், R மாமுண்டி ஆகியோர் கலந்து கச்சேரிகள் செய்கின்றனர்.